042319

OL/2018/48-T





**48 | T**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2018 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2018 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2018**

දෙමළ සාහිත්‍ය රසාස්වාදය
**தமிழ் இலக்கிய நயம்**
Appreciation of Tamil Literary Texts

**11. 12. 2018 / 1300 - 1610**

පැය තුනයි
*மூன்று மணித்தியாலம்*
*Three hours*

| | | |
|---|---|---|
| අමතර කියවීම් කාලය | - | මිනිත්තු 10 යි |
| **மேலதிக வாசிப்பு நேரம்** | - | **10 நிமிடங்கள்** |
| Additional Reading Time | - | 10 minutes |

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

✳ பகுதி **I** இல் **1, 2** ஆகிய **இரு** வினாக்களுக்கும் பகுதி **II** இல் **3**ஆம் வினாவுக்கும் பகுதி **III** இல் உள்ள **4, 5, 6, 7** ஆகிய வினாக்களுள் எவையேனும் **இரண்டு** வினாக்களுக்குமென எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை தருக.

## பகுதி I

**1.** (i) தொடக்கம் (v) வரையுள்ள வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) "அதோ! போதிமரங்கள்; பாவ வெயில் மறைக்கும் அறக்குடைகள்"

(அ) மரங்கள், போதி மரங்கள் எனச் சுட்டப்பட்டமைக்கான காரணம் யாது?

(ஆ) மரங்கள் எவ்வாறு அறக்குடைகளாகின்றன?

(ii) "... பிள்ளைமீன்
புள்ளரிக்கும் நாடன் திருமடந்தை"

(அ) இங்கு நாடன் என்று சுட்டப்பெறுபவன் யார்?

(ஆ) திருமடந்தை யாருக்கு உவமிக்கப்படுகிறாள்?

(iii) "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு..."

(அ) இங்கு 'கால்' எனப்படுவது யாது?

(ஆ) 'நுசுப்பு' எனப்படுவது யாது?

(iv) "இன்றுவரை அம்மா
கதவுகளின் பின்னிருந்துதான்
அப்பாவோடு பேசுகிறாள்.
கடைசிவரை அப்பாவும்
மறந்தே போனார்
மனசுக்குள் தூரெடுக்க."

(அ) 'அம்மா' என்ற பாத்திரத்தினூடாக, கவிஞர் உணர்த்தவிழைவது யாது?

(ஆ) இங்கு 'தூர்' என்ற குறியீடு எதனை உணர்த்துகின்றது?

01010001080112319

[பக். 2 ஐப் பார்க்க

(v) "கோழிக்குஞ்சை அலகால் கவ்வி, அசகாயமாய்ப் பறக்க முயலும் காகமாய் அவன் நழுவுவதற்கு முன் என் பஞ்சப்பாட்டின் முதலடியைக் கீழ்ஸ்தாயியில் சுரம் கூட்டினேன்."

(அ) கோழிக்குஞ்சு எதற்கு உருவகிக்கப்பட்டுள்ளது?

(ஆ) 'பஞ்சப்பாட்டு' என்ற தொடரின் மூலம் எழுத்தாளர் எதனைச் சுட்டுகிறார்?

(4 × 5 = 20 புள்ளிகள்)

**2.** கீழ்க்காணும் பாடற்பகுதியை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

வெண்டை விரல்கள் விறைத்திடினும் எங்கள்
மேனி குளிரில் நடுங்கிடினும் - இரு
கெண்டை விழிகள் பளபளக்கும், தளிர்
கிள்ளவோ கைகள் பரபரக்கும்!

கூடை அசைந்து பக்கத்திலும் வந்து
கூட்டும் 'கிறுக் கிறுக்' கோசையிலே - நெஞ்ச
மேடையிலே சதி ராடுமெண் ணங்களின்
வேதனை துன்ப ஒலிகேட்கும்!

பக்க நிரைச்செடி சிக்கிடும் போதிலும்
பக்குவ மாகவி லக்கிச் செல்வோம் - எம்மைச்
சிக்கவைத் திருக்கும் அடிமைத் தளையினை
தூக்கி யெறியத் துணிவு கொள்வோம்!

வெட்டிய செடியில் புடைத்தெழும் அரும்பென
மேலுறும் எண்ணம் எங்கள் மனதில் - இனி
முட்டித் ததும்பி முளைத்து விடும் எம்மை
மூடிய பேரிருள் ஓட்டிடுவோம்.

(i) தாம் எடுத்துக்கொண்ட பணியில் தோட்டத் தொழிலாளிப் பெண்கள் கொண்டுள்ள ஈடுபாட்டைக் கவிஞர் எவ்வாறு புலப்படுத்துகிறார்?

(ii) பெண் தொழிலாளிகளின் துயரநிலை புலப்படும் அடிகள் **இரண்டைத்** தருக.

(iii) தோட்டத் தொழிலாளிப் பெண்களை மூடியுள்ள இருளை அகற்றவல்லது எதுவென்று கவிஞர் கருதுகிறார்?

(iv) இங்கு கையாளப்பட்டுள்ள உவமைகள் **இரண்டை** விளக்குக.

(v) 'நெஞ்ச மேடையிலே சதிராடுமெண்ணங்கள்' என்ற தொடரின் இலக்கிய நயத்தை விவரிக்குக.

(5 × 5 = 25 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க

## பகுதி II

**3.** கீழ்க்காணும் உரைப்பகுதியை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

உனக்குத் தெரியுமா? புகாரிலிருந்து மதுரைக்கு வந்துகொண்டிருந்தபோது இடைவழியில் ஓர்நாள், கோசிகன் எனும் பார்ப்பான் மாதவியிடமிருந்து மடலொன்று கொண்டு வந்தான். புனுகு நெய்யின் வாசம் வீசும் அம்மடலைப் பிரித்ததுமே கோவலன் மாதவியின் நினைவுகளில் மூழ்கிப்போனான். மடலை வாசிக்காது மயங்கி நின்றான். அடிகள் கவுந்தி, தன் குரலைச் செருமி நாங்களிரு பெண்கள் அங்கிருக்கிறோம் என்பதைக் கோவலனுக்குத் தெரிவித்தார். பிறகுதான் அம்மடலை அவன் வாசித்தான். பெண்ணே! மாதவியெனும் மங்கை நல்லாளை நான் அன்றுதான் முழுமையாக அறிந்தேன். எனக்கு இந்த மலர்களைக் கொண்டு மாலை தான் தொடுக்கத் தெரியும். ஆனால் சொற்களைக் கொண்டு சரம் தொடுக்கத் தெரிந்த வித்தகி அவள். அருகன் பள்ளியில் எண்ணையும் எழுத்தையும் கற்றவள்தான் நான். ஆயினும் மாதவிபோல் கவிபுனையக் கற்றவளில்லை, ஆழ்ந்த தர்க்க நூல், தேர்ந்த சாத்திரம் பயின்றவளில்லை. அம்மடலில், கள்வர் போல நள்ளிரவில், புகார் விட்டு நீங்கினீரே, இதில் என் குற்றம் என்ன என்று கோவலனிடம் கேட்டிருந்தாள் அவள். தண்டனை பெறுகின்ற குற்றவாளிக்கு தான் செய்த குற்றமென்னவென்று தெரிந்துவிடும். தெரியவில்லையெனில் தண்டிக்கும்போது அது அவனுக்குத் தெரிவிக்கப்படும். ஆனால் செய்த குற்றமென்னவென்று அறியாமல் தண்டனையை அனுபவிக்கின்றேனே. இதில் என் குற்றமென்ன? என்று கேட்டிருந்தாளவள்.

(i) மாதவி மீதான காதலை, கோவலன் முழுவதுமாகத் துறந்துவிடவில்லை என்பது இங்கு எவ்வாறு புலப்படுத்தப்படுகின்றது?

(ii) கவுந்தி அடிகளினதும் மாதவியினதும் புத்தி சாதுரியம் வெளிப்படும் இடம் ஒவ்வொன்று தருக.

(iii) இங்கு கண்ணகியின் பெருந்தன்மை வெளிப்படுமாற்றை எடுத்துரைக்குக.

(iv) இப்பகுதியில் காணப்படும் உவமை அணி ஒன்றை எடுத்துக்காட்டி விளக்குக.

(v) "சொற்களைக் கொண்டு சரம் தொடுக்கத் தெரிந்த வித்தகி அவள்" என்ற தொடரில் நீர் காணும் நயத்தினை விவரிக்குக.

(5 × 5 = 25 புள்ளிகள்)

## பகுதி III

● எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கு விடை எழுதுக.

**4.** **கிஷ்கிந்தைப் படலத்தில்,** தாரையின்

(i) தோற்றம்

(ii) மதிநுட்பத்துடன் கூடிய சொல்வன்மை

என்பவற்றைக் கம்பர் சித்திரிக்குமாற்றை விவரிக்குக.

**5.** "உரிமையும் கடமையும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை" என்பதை வலியுறுத்துவதாக **உரிமையும் கடமையும்** என்ற கட்டுரை அமைந்துள்ளது. விளக்குக.

**6.** புலம்பெயர்ந்து வாழும் ஒருத்தனின் தனிமையையும் அவலத்தையும் சித்திரிப்பதாக **தீவு மனிதன்** என்ற சிறுகதை அமைந்திருக்குமாற்றை விளக்குக.

**7.** **காலந்தோறும் அகம்** எனும் பாடப்பரப்பில்,

(i) தலைவன் - தலைவியரிடையிலான சிற்றின்பக் காதலும்

(ii) இறைவன்மீது ஆன்மா கொண்ட பேரின்பக்காதலும்

எடுத்துரைக்கப்பட்டிருக்குமாற்றை விளக்குக.

(15 × 2 = 30 புள்ளிகள்)

* * *

